உ

குருபாதம்.

# கடவுளுக்கு உருவ வழிபாடு வேண்டுமா?

தருமையாதீன சைவ சித்தாந்தப் புலவர்;
சித்தாந்த சரபம், காசிவாசி
சிவஸ்ரீ ஈசான சிவாச்சாரிய சுவாமிகள், பழனி.






பூமியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசை கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழி திருநாவலூர் வன்தொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாதவூரர் திருத்தாள் போற்றி.

—நால்வர் துதி.

திருவாரூர் அநபாயன் ஆஸ்திக சங்க சமயப் பிரசார
வெளியீடு.

 விலை 6 அணா.

# அன்பே சிவம்.

---

அண்ணல் ஆலவாய் நண்ணி னுன்றனை
எண்ணியே தொழத் திண்ணம் இன்பமே.

—சம்பந்தர்.

சிவசிவ என்கிலர் தீவினையாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவருமாவர்
சிவசிவ என்றிடச் சிவகதிதானே.

அன்பு சிவம் இரண்டு என்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே.

—திருமூலம்.

கொல்லத் தான்நம னார்தமர் வந்தக்கால்
இல்லத் தார்செய்ய லாவதென் ஏழைகாள்
நல்லத் தான்நமை யாளுடை யான்கழல்
சொல்லத் தான்வல்லி ரேல்துயர் தீருமே.

—அப்பர்.

காலமுண் டாகவே காதல்செய் துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே.

—திருவாசகம்.

சாத்திரமும் தோத்திரமும் ஆனார்தாமே.

எண்ணிலிப்பூழி தவஞ்செய்து அங்கு ஈசனை
உண்ணிலைமை பெற்றது உணர்வு.

ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண்
ஆரேனுங் காணா அரன்.

திருச்சிற்றம்பலம்

உ
குருபாதம்

# கடவுளுக்கு உருவ வழிபாடு வேண்டுமா?

சித்தாந்த சரபம், காசிவாசி
**சிவஸ்ரீ ஈசான சிவாசாரியசுவாமிகள், பழனி**

திருவாரூர் ஸ்ரீ கமலாம்பிகை ஆடிப்பூர விழாச் சொற்பொழிவு.

**8—8—53.**



## தோற்றுவாய்.

ஆஸ்திக நெறிநிற்கும் பெரியோர்களே! இன்று நாம் கடவுளுக்கு உருவ வழிபாடு வேண்டுமா என்ற விஷயத்தைப்பற்றி மிகமிகச் சிந்திக்கவேண்டிய நிலையில் இருக்கின்றோம். இப்பெரிய விஷயத்தைப்பற்றி ஓர் முடிவிற்கு வருவதற்குப் பலபடியான ஆராய்ச்சி வேண்டும். நான் இப்போது அம்முடிவு காண்பதற்கான சில அவசியமான குறிப்புக்களையே அவரவர்களின் ஆராய்ச்சியின் முடிவு காணக் கூறுகின்றேன்.

அண்மையில் உருவ வழிபாட்டில் நம்பிக்கையற்ற சிலரது வெறுக்கத்தக்க நிகழ்ச்சிகள் நடந்தன. இந்நிகழ்ச்சி வேறொன்றின தொடர்புபற்றி வந்ததேயாகும். சமீபத்தில் தருமை யாதீனத்தில் நடந்த சர்வமத மஹாநாட்டில் வேற்றுச் சமயத்தவரும் உருவ வழிபாட்டைப்பற்றி ஆதரித்தே பேசினர்.

கடவுளுருவை அழிக்கவேண்டுமென்று தோன்றிய இயக்கம் ஸ்தூலமானது. இந்த இயக்கத்திற்குச் சூக்கும

மானதும்—அதிசூக்குமமானதுமான சில காரணங்களும் இருக்கின்றன. சமீபத்தில் நடந்த குன்றக்குடி மஹாநாட்டில் சிலர், இவற்றில் ஸ்தூலமான இயக்கத்தைப் பற்றியே ஆராய்ந்தனர். அப்போது நான் சூக்கும—அதிசூக்குமக் கருத்துக்களைப் பேசினேன். இக்கருத்தையே இருவேறு இடங்களிலும் பேசினேன். அங்கெல்லாம் என் பேச்சை ஒலிப்பதிவு செய்தனர். இக்கருத்தையே திருநெல்வேலி உற்சவச் சொற்பொழிவிலும் பேசினேன். கேட்பார்நிலை சரியில்லாததால் நான் கூறிய அனைத்தும் அங்குப் பயன்படவில்லை.

இவ்வுலகில் ஒருவருக்கு எதையும் அறிய உரிமை உண்டு. ஆனல் ஆன்றோர் கைப்பற்றும் ஒன்றுல் அவர்கள் தாமதித்தே முடிவுகாண வேண்டும். வைத்திய சம்பந்தமான அறிவு ஒருவருக்கு இருக்கலாம்; ஆனல் அவர்கள் அனுபவ அறிவை மறுக்கமுடியாது. அப்படியே உருவவழிபாட்டுக் கொள்கையிலும் கொள்ள வேண்டும். எல்லாவற்றிற்கும் முடிவு சொல்ல சைவ சித்தாந்தமே வல்லதாகும். சைவ சித்தாந்த முடிவுகளுக்குத் திருக்கோயில்களும் துணைசெய்கின்றன. இன்று நான் கூறுவன சாஸ்திரங்களின் முடிந்த முடிவுகளே. இவைகளே ஒவ்வொருவரும் சிந்தித்துத் தெளிவதற்கு உரியன.

## கடவுள் உண்மை.

நாம் கடவுள் உண்மையைப்பற்றித் தெளிவாக அறியவேண்டும். அவர் இலக்கணத்தையும் ஆட்சிபண்ணும் திறத்தையும் தெளிவாக அறியவேண்டும். இவற்றைப்பற்றி நாம் சிந்திக்கவேண்டும். சிந்திப்பது எப்படி? இச்சிந்தனையில் திருஉருவ வழிபாடு வேண்டுமா என்று ஆராய்ந்தால் வேண்டுமென்றே முடிவுவரும். இப்போது கடவுள் உண்டா? இல்லையா? என்ற ஆராய்ச்சி நமக்கு வேண்டுவதில்லை. ஏனெனில் கடவுள் நம்பிக்கை இல்லாதவரும் சிலசில சமயங்களில் கடவுள் உண்டு என்று கூறுகின்றனர். ஆதலின் அதைப்பற்றிப் பேசவில்லை. எனினும் இரண்டொரு கருத்துக்களைக் கூற விரும்புகிறேன்.

ஒரு பெரிய மாளிகைக்கு அஸ்திவாரம் அமைவது போல் காணப்பட்ட உலகத்தால் காணப்படாத கடவுள் உண்டு என்பதை எச்சமய நூல்களும் கூறுகின்றன. இது பிரத்யக்ஷ உண்மையாகும். எல்லாம் இயற்கையே என்றால் இயற்கைக்கு ஒரு தொழில் என்பது இல்லை. ஒரு மண் குடத்தைக் காட்டி செயற்படுத்த கருத்தன் உண்டு என்பதைக் கூறுவதுபோல காரிய ரூபமான உலகத்தைக்காட்டி இறைவன் உண்டு என்பதைப் பெரியோர்கள் உணர்த்தினார்கள். கடவுள் தன்மையால் மூன்று பெரிய செயல்கள் நடக்கின்றன. அவைகள் படைத்தலும், காத்தலும் அழித்தலுமாகும். இம்முத் தொழில்களுக்கும் தலைவர் கடவுளே. முத்தொழிலைச் செய்பவர் தனித்தனித் தலைவர்கள். ஆயினும் அவர் களுக்கும் மேலான ஒரு பரம்பொருள் தலைவராகக் கடவுள் இருக்கின்றார் என்று சாஸ்திரங்கள் கூறு கின்றன.

## திரு உருவக் கொள்கை.

திருஉருவக் கொள்கைபற்றி ஸ்மார்த்தர்–சைவர்–மாத்துவர்–வைணவர் என்பாரும் பிறருங் கூறுகின்ற னர். அவர் ஒவ்வொருவரும் தத்தம் கொள்கைகளை எப்படிக் கூறுகின்றனர் என்பதை உணரவேண்டும். வேதாந்தம், சங்கரபாஷ்யம் முதலியன இதைப்பற்றி என்ன கூறுகின்றன. வேதத்தை உணர, இதிகாசம், புராணம், ஸ்மிருதி முதலியன துணை செய்கின்றன. இவற்றை அன்றி வேத உண்மைகளைக் காணமுடியாது. நியாயம்—தருக்கம்—வியாகரணம் என்பன வேதத்தை உணரத் துணைபுரியும் கருவி நூல்களே. வடநாட்டில் நான் ஒருவரோடு பேசியபோது சைவர்களுக்கே வேதம் உடன்பாடானால், சைவர்கள் வேதத்திற்குப் பாஷ்யம் செய்திருக்கிறார்களா? என்று கேட்டார். நான் ஆகமமே வேதத்திற்குப் பாஷ்யம் என்றேன். வடநாட் டில் உள்ள சில சமாஜங்கள் தர்க்கம், நியாயம், முதலிய வற்றைக்கொண்டு வேதத்தின் உண்மை காண முயல் கின்றன. இதிகாசம், புராணம், ஸ்மிருதி முதலியவற் றைக்கொண்டு ஆராய்ந்தால் அன்றி அவர்கள் உண்மை காணமுடியாது.

## மறுப்பும் விளக்கமும்.

இவர்கள் கடவுளுக்கு உருவ வழிபாடு செய்வது உபசாரத்திற்காகத்தானே என்று கூறுகிறார்கள்.

இக்கொள்கையே நான் முதலில் சொல்லிய உருவ வழிபாட்டின் சூக்கும மறுப்பு ஆகும். இவர்கள் என்ன சொல்லுகின்றனர். மனிதர்கள் ஒரு உயர்ந்த எல்லையை அடைந்துவிட்டால் உருவ வழிபாடு வேண்டுவதில்லை என்கிறார்கள். நோய்கண்டவன் நோய் நீங்க மருத்துவன் வழிநிற்றல் வேண்டும். கடவுள் உருவைப்பற்றி ஐயங் கொள்ளுதலாகிய நோய் கண்டவர்கள் அதைப்பற்றி நன்கு அறிந்தார் சொல்வழி நிற்க வேண்டும். ஆனால் இன்றைய நிலை இப்படியில்லை. ஐயங்கொள்ளுகிறவர்கள் ஆராயவும் முன்வரவில்லை. அவர்கள் கூறுவன ஆராய்ந்து கண்ட முடிவுகள் ஆகா. அவரவர்கள் கருத்துக்களில் தோன்றுவனவனேயாகும்.

அக்கருத்துக்கள் எவையாயினும் பிறர் ஏற்றுக் கொள்ளவேண்டுமாம். பிறர் சொல்லும் கருத்துக்களைத் தாங்கள் ஆராயவுங்கூடாதாம். இக்கொள்கை வாதத்திற்குப் பொருந்துவதன்று. இப்படிப்பட்டவர்கள் சமயங்கள் எல்லாம் ஒரே கொள்கைகளையே கூறுவதால் சமயங்கள் எல்லாம் ஒன்றே என்கின்றனர். எல்லாம் ஒன்ருய் இருக்கமுடியாது. சைவசமயப் பெரு நூல்களில் உண்மையான முடிவுகள் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றைச் சிந்தித்தால் நாம் உண்மை உணரலாம். உருவ வழிபாடு ஒரு அளவிற்கு மேற்பட்டவர்களுக்கு வேண்டாம் என்ற கொள்கையைச் சைவ சமயம் மறுக்கின்றது.

## உருவ வழிபாடுபற்றி பிற சமயமும், சித்தாந்த சைவமும்.

விக்ரக அழிப்புக்கொள்கைக்கு மட்டும் இப்போது பரிகாரம் தேடினும், அதற்கு அடிப்படையாயிருப்பதையும் அகற்ற வழிதேடவேண்டும்.

கடவுள், வாக்கு மனங்களைக் கடந்தவர் என்பது சமயக்கொள்கை "மாற்றம் மனங்கழிய நின்ற மறை யோனே" என்பது திருவாசகம். இதன் உட்கருத் தென்ன? கடவுள் பாச ஞானத்தாலும் பசு ஞானத்தா லும் அறியப்படாதவர் என்பதேயாகும். (பாச ஞானம் என்பது உயிர்கள் கருவி கரணங்களின் துணைகொண்டு அறிவது, பசு ஞானம் உயிர்கள் கருவி கரணங்களின் துணையின்றி நானே கடவுள் என்று அறிவது) அவன் திருவருள் சார்பாய் ஆன்ம அறிவால் அல்லது அறியப் படான். ஆன்மா தனித்து நின்று இறைவனை அறிய முடியாது. ஆன்மா சரீரத்தைச் சார்ந்து நிற்பதால் ஒன்றைக் கருவி கரணங்களால் அறிகின்றது.

நாம் இறைவனை உணர கருவியால் வழிபாடு இயற்றுகின்றோம். இதற்குக் காயம் பயன்படுகிறது. ஆதலால் உருவ வழிபாட்டிற்கு நம் சமயம் வழி கூறு கின்றது. காயத்தால் வழிபடுவது உருவ வழிபாடு. மனத்தால் வழிபடுவது அரு உருவ வழிபாடு. உணர்வால் வழிபடுவது அதீத வழிபாடு. இவற்றுள் உணர்வால் வழிபடுவதைமட்டும் ஏகான்ம, மாயாவாதம் கூறும் இங்கே அதீத நிலையில் உருவ வழிபாடு வேண்டாம் என்பது போலி வேதாந்தம். வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம் அப்படிக் கூறவில்லை. வேண்டுமென் கின்றது.

கடவுள் உலகிலும் பொறி புலன்களிலும் மனத்தி லும் அறிவிலும் விரவியிருக்கின்றார். உலகில் கடவுள் விரவியிருப்பதால் (கலப்பினாலும்) கடவுளுக்கு உரு உண் டென்று அறிகின்றோம். இதனை,

"உணர்வின் நேர்பெற வருஞ்சிவ போகத்தை ஒழிவின்றி உருவின்கண் அணையும் ஐம்பொறி அளவினும் எளிவர அருளினை"

என்ற ஞானசம்பந்தர் புராணத்தாலும் 'தோடுடைய செவியன்' என்ற தேவாரத்தாலும் அறியலாம். ஆகாச சரீரம் பிர்மம் என்பது வேத வாக்கு. கடவு ளுக்கு உருவம் இல்லையென்றால் பிரபஞ்சத்தில் அவன் கலப்பற்றவன் என்று எண்ணநேரும். அதனால் நாத்திகம்

வளரும். கடவுள் இருக்கின்றார் என்ற கொள்கையால் ஒழுக்கம் கெடாது. இல்லையென்றால் ஒழுக்கம் கெடும் என்று சிலர் ஐயத்துடன் கூறுகின்றனர். இந்த ஐய வுணர்வும் கடவுள் இல்லையென்பதற்கே துணை செய் கின்றது.

## கடவுள் உலகத்தோடு ஒன்றாய் உடனாய் வேறாய் நிற்றல்.

கடவுள், உலகு முதலியவற்றில் ஏன் இருக்கின்றார்! அவை முறை பிறழும்போது திருத்தவே அவற்றுடன் இருக்கின்றார். அவை அழியும்போது தானும் அழிய அல்ல, ஜடசக்திப் பொருள்களாகிய இயந்திரங்களை இயக்குகின்றவர்களும் அவற்றுடன் ஒருங்கு இயைந்து இருக்கக் காண்கின்றோம். உலகம் ஒவ்வொரு வகை யில் பயன்படுகின்றது. ஒவ்வொரு வகையில் பயன்பட வில்லை. இவற்றோடு இறைவன் எப்படிக் கலந்திருக் கிறான் என்பதை உணரவேண்டும். வாழ்விலே காண வேண்டும். எப்படிக் காண்பது? செயலாலும் புலனாலுங் காணவேண்டும்.

"சித்தமும் செல்லாச் சேட்சியன்" "நாலுணர்வு உணரா நுண்ணியோன்" என்பது பாச பசு அறிவால் அறியப்படாதவன் என்பதை உணர்த்துகின்றது. ஏகான்மவாதம் தன்னின்வேறு கடவுள் இல்லை என்று கூறுகின்றது. இதுவும் உருவ வழிபாட்டின் அதி சூக்கும விரோதியே. பட்டினத்தடிகள்.

"கல்லினும் செம்பினுமோ இருப்பன் எங்கள் கண்ணுதலே" என்று கூறினர் இதற்கு சிலர் சிந்தனையால்அறியத்தக்க இறைவனுக்கு உருவ வழிபாடு வேண்டாமெனப் பொருள்கொள்கின்றனர். கல்லினும் செம்பினும் மட்டும் இறைவன் இல்லையென்பதே இதன் உட்பொருளாகும். சிவஞானசுவாமிகள் "பேயன்ன புறச்சமயப் பிணக்கு நூல் வழியனைத்தும் பிழையே" யென்று கூறுகின்றார்கள். சைவ சித்தாந்தம் பிற சமயங்களைச் சோபான முறைப்படி ஏற்றுக்கொண்

டிருப்பது என்பது ஒவ்வொரு இடங்களில் அச்சமயக் கொள்கைகள் சைவத்திற்கு உடன்பாடாய் உதவுகின்றன என்ற வழக்குப்பற்றியேயாகும்.

ஏகான்மவாதம் சைவர்களைச் சாமான்ய பக்தி காண்டிகள் என்று கூறும் சைவர்கள் அப்படிப்பட்டவர்கள் அல்லர். ஒரு அன்பர் பக்தி மக்களுக்குப் போதுமானது மதம் மனிதனுல் உண்டுபண்ணப்பட்டது. அது தேவையில்லையென்ருர் இது வருந்தத்தக்க கொள்கையாகும். சைவ சமயப் பிரசாரகர்கள் இத்தகைய குற்றமுடைய கருத்துக்களை மேடைகளில் பேசாது செம்மையாகப் பணிபுரிதல் வேண்டும்.

மாயாவாதிகள் கடவுளை நிர்க்குணம் வாய்ந்தவர் என்று கூறுகின்றனர். நாமும் அதை ஒத்துக்கொள்கிருேம், ஆனுல் பொருள்காணும் முறையில் நம்மோடு மாயாவாதிகள் பெரிதும் மாறுபாடுகின்றனர். கடவுள் நிர்க்குணன் என்ருல், சாத்துவிக, இராஜஸ, தமோ குணங்கள் ஆகிய மாயா குணங்கள் அற்றவன் என்றே நாம் பொருள் கொள்கின்ருேம். இந்த இடர்ப்பாட்டை நீக்கவே "எட்டுவான் குணத்து இன்னம்பர் ஈசனே" என்ற அருள் வாக்குந் தோன்றிற்று. இறைவன் எல்லாப் பொருள்களிலும் கலந்திருக்கின்ருன் என்று முன்னர்க் கூறினேம். அப்படிக் கலந்திருப்பதால் அவன் இறைமை கெடாது, ஏன்? அவன் எல்லாவற்றையும் கடந்தும் இருக்கின்ருன். இப்படியெல்லாம் இறைவன் இருப்பதால் அவனை உருவிலும்—அரு உருவிலும், அருவிலும், சொரூபத்திலும் சரியை கிரியை யோக ஞானங்களால் வழிபடவேண்டும். இந்த உண்மைகளை உணர்த்தவே சமயாசாரியர்கள் தோன்றினர். அவர்கள் வழிவந்த நூல்களும், மடங்களும் இந்த உண்மையினையே உணர்த்துகின்றன. இந்த உண்மைகளை விளக்குபவர்களே சந்தான குரவர்களாகிய மெய்கண்டார் முதலிய அருட்குருமார்கள். எனவே கடவுள் உலகப்பொருளோடு கலப்பினுல் ஒன்ருயும் இயக்குவிக்கும் செயலால் உடனுயும் பரம்பொருள் தன்மையால் வேருயும் இருக்கின்ருன் என்பதே முடிந்த முடிபாய சைவ சித்தாந்தம்.

## மெய்யறிவுப் பெரியாரும், பகுத்தறிவுப் பெரியாரும்.

மெய்ஞானப் பெரியோர்கள் இப்படி இறைவனை சுவானுபூதியில் கண்டு விளக்கிய வழிகளில் வழிபடாத வர்கள் அசுரர் ஆவர். அசுரன் என்பதற்கு இங்குப் பொருள், பொறி புலன்களால்வரும் இன்பத்தை மட்டும் அனுபவிப்பவன் என்பதாகும். இவர்களே உலகாயதப் பகுத்தறிவுப் பெரியார்கள் எனப்படுவார்கள். மனிதன் அங்ஙனம் வரும் இன்பத்தை மனம் வாயிலாக அனு பவிப்பவன் ஆவான். தேவர்கள் அறிவு வாயிலாக அனுபவிப்பவர்கள். சிவஞானிகள் அறிவிழந்து நின்று அருள் ஞான வாயிலாக எதனையும் அனுபவிப்பவர்கள்.

## சிவஞானிகளுக்கும் உருவ வழிபாடு அவசியமே.

மேல்நிலையில் நின்றோரும் வாசனுமலம்பற்றிக் கீழ் நிலைக்கு ஒரோர்கால் வரக்கூடும். ஆதலின், சிவஞானி களும் தம் நிலை வழுவாதிருப்பதற்கு உருவ வழிபாட்டை மேற்கொள்ள வேண்டும், என்பது சித்தாந்தக் கருத்து. இதனல் ஞானிகளுக்கு உருவ வழிபாடு வேண்டாம் என்பது எப்படிப் பொருந்தும்.

## திருக்கோயில் வழிபாடும், விழாக்களின் இன்றியமையாமையும்.

திருக்கோயில்களில் நிகழும் பூசைகள் இறைவனை எண்ணுதவனையும் எண்ணச்செய்கின்றன என்று சிவாகமங்கள் கூறுகின்றன. இறைவனை அறிந்தவனை யும், இறைவனை அறியாதவனையும் அறிவிக்க வழிபாடு வேண்டும் என்பது சிவாகமத்தின் உட்கிடையாகும். ஆலயங்களில் பண்டு பவித்ரோத்ஸவங்கள் கொண்டா டப்பட்டன (பவித்திரம்—பரிசுத்தமானது) இந்த உத்ஸ வம் ஆன்மாக்கள் மனோ வாக்குக் காயத்தால் நிகழ்த்தும் பாவத்தைப் போக்கச் செய்யப்படுவதாகும். இத் தகைய உத்ஸவங்களும் உருவ வழிபாட்டின் உயர் வையே புலப்படுத்துகின்றன.

காளத்தி நாதர் உருவத்தைக் கண்டே கண்ணப்பர் அன்புருவானார் என்பதைப் பெரிய புராணம் நன்கு விளக்கும். அவர் முன்பு செய்த தவத்தின் ஈட்டம் முடிவிலா அன்பை இறைவனிடம் உண்டாக்கிற்று. கடவுளின் வடிவத்தைக் கண்டாலன்றி ஆன்ம அறிவில் அன்பு எழாது. ஆடிப்பூரம் எல்லா ஆன்மாக்களும் பரிபாகம் எய்தற்பொருட்டுக் கொண்டாடப்படுவதாகும்.

இப்படிப் பல துறையாகவும் சிந்திக்கும்போது கடவுளுக்கு உருவ வழிபாடு வேண்டும் என்ற உண்மையையே நாம் உணர்ந்தவர்களாகின்றோம்.

“உருவருள் குணங்க ளோடும் உணர்வருள் உருவிற்றோன்றும்
கருமமும் அருள ரன்றன் கரசர ணாதி சாங்கம்
தருமரு ளுபாங்க மெல்லாம் தானருள் தனக்கொன்றின்றி
அருளுரு உயிருக் கென்றே ஆக்கினன் அசிந்தனன்றே”

(சிவஞானசித்தியார்.)

“ஈறாய்முதல் ஒன்றாய்இரு பெண் ஆண்குணம் மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம்அவை ஐந்தாய்
ஆறார்சுவை ஏழோசையோ(டு) எட்டுத்திசை தானாய்
வேறாய்உட(ன்) ஆனான்இடம் வீழிம்மிழ லையே”

(ஞானசம்பந்தர் திருவீழிமிழலைத் தேவாரம்)

“உலகெலா மாகிவேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி
அலகிலா உயிர்கள் கன்மத் தாணையின் அமர்ந்துசெல்லத்
தலைவனாய் இவற்றின் தன்மை தனக்கெய்தலின்றித்தானே
நிலவுசீர் அமலனாகி நின்றனன் நீங்காதெங்கும்”

(நிட்களத்திருமேனி)

“ஆதியாய் நடுவுமாகி அளவிலா அளவுமாகிச்
சோதியாய் உணர்வுமாகித் தோன்றிய பொருளுமாகிப்
பேதியா ஏகமாகிப் பெண்ணுமாய் ஆணுமாகிப்
போதியா நிற்குந்தில்லைப் பொதுநடம் போற்றிபோற்றி”

(சகளத்திருமேனி)

“கற்பனை கடந்தசோதி கருணையே உருவமாகி
அற்புதக் கோலநீடி அருமறைச் சிரத்தின்மேலாம்

சிற்பர வியோமமாகும் திருச்சிற்றம் பலத்துள்நின்று
பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றிபோற்றி''

திருச்சிற்றம்பலம். (பெரிய புராணம்)



# இறைவன் திருமேனியும், உயிர்களின் உடல்களும் பற்றிய விளக்கம்.

## (1) உருவங்களின் வடிவும் பண்பும்.

உருவம் என்று சொன்னவுடனேயே எலும்பு தோல் முதலிய பொருள்களால்ஆன ஊன உடம்பையே சிலர் எண்ணுகின்றனர். கண்ணுக்குப் புலனுகாத ஒலி முதலியவற்றிற்கும், காமத்திற்கும், கோபத்திற்கும் பொய்க்கும் உருவம் உண்டென்றும், நிறம் உண்டென்றும் விஞ்ஞான நிபுணர்களும் கூறுகின்றனர். சந்தியா வந்தனத்தில் அஹமர்ஷணம் என்ஞெரு கிரியை இருக்கின்றது. அதற்குப் பாவத்தைக் கெடுத்தல் என்பது பொருளாகும். அஹம்—பாவம், மர்ஷணம்—கெடுத்தல். அப்பாவம் மைக்குழம்பு போன்றது என்று சிவாகமங்களும் கூறும். உருவம் என்றமையால் எல்லாம் ஒரே தன்மை உடையன என்று கூறுதல் பிழையாகும். அங்ஙனமே இறைவன் ஆகாய உருவினன் என்றும், தீயுருவினன் என்றும், சிவபெருமான் செந்நிறத்தவர் என்றும், உமாதேவியார் பசுமை நிறத்தவர் என்றும், திருமால் கருநிறத்தவர் என்றும், மன்மதன் கருநிறத்தவன் என்றும் பேசப்படுகின்றனர். உயிர்ப்பொருளுக்கும், உயிரில் பொருளுக்கும் அவற்றின் குணம் பற்றியும், நிறம்பற்றியும் வடிவங்கள் உண்டாகின்றன. அங்ஙனமே இறைவன் எல்லாப்பொருள்களோடும் கலந்துநிற்கும் தன்மைபற்றி, உலகப் பொருள்களைத் தனக்கு உரிய உபசார வடிவமாகக் கொண்டிருக்கின்ளுன். எல்லாப் பொருள்களையும் கடந்து நிற்கும்

தன்மைபற்றி உலகத்திலே காணப்படுகின்ற எல்லா வடிவங்களுக்கும் வேருன உண்மை வடிவம் உடையவ ஞகின்ருன். எல்லா உயிர்களிடத்திலும் இரக்கம் உடைமையால் இரக்கமே திருமேனியாக உடையவன் என்றும், இரக்கம் என்பது எல்லா உயிர்களிடத்திலும் ஒப்ப இயல்பாக எழுந்த கருணையாதலால், கருணை வடிவினன் என்றும், அருள் வடிவினன் என்றும் சைவ சாத்திரங்களால் பேசப்படுகின்ருன்.

(2) உயிர்களின் மும்மல காரியமாகிய பல்வேறு

உருவங்களுக்குக் காரணம்.

(அ) மாயை :— உலகப் பொருள்களெல்லாம் மாயையை அடிப்படையாகக்கொண்டு எழுந்தவைகளே. மாயை என்பது ஒரு அறிவற்ற ஜடப்பொருளே. அது என்றைக்கும் காரண ரூபமாய் உள்ள அழியாத உண் மைப் பொருளே. மா, என்பது ஒடுங்குதல். யா, என் பது வருதல் ஆதலின் எல்லாக் காரியங்களும், தன்பால் வந்து ஒடுங்குதற்கும் தன்கண் நின்று தோன்றுதற்கும் காரணமாய் நின்றது எதுவோ அதுவே மாயை. அதைத் தோன்றிநின்று அழியும் காரிய உருவமாகச் செயற் படுத்தவே ஒரு கருத்தா வேண்டும்—உள்ள மண்ணின் றும் குடத்தைச் செயற்படுத்த ஒரு குலாலன் வேண்டும் என்பதுபோல; காரியம் என்பது தோன்றி நின்று அழியும் தன்மை உடையதாய் என்றும் உள்ள மூல காரணத்தில் ஒடுங்கி நிற்பது. ஜடப்பொருள்தானே செயற்படாது ஆகையால் செயற்படுத்த அறிவுடைய ஒரு கருத்தா வேண்டும்.

(ஆ) கன்மம் :— அங்ஙனம் ஒரு கருத்தாவால் மாயையிலிருந்து தோற்றுவிக்கப்பெறுகின்ற வடிவங் கள் உயிர்களின் கன்மங்களுக்கு ஏற்பவே தோற்று விக்கப்பெறுகின்றன. அந்தக் கன்மங்கள் விருப்பு வெறுப்பை முன்னுகக்கொண்டு உயிர்கள் செய்யும் நல்வினை தீவினைகளே ஆகும். அந்த விருப்பு வெறுப் புக்கள் அனுதியாக உயிர்களுடைய அறிவை பந்தித் துள்ள குற்றம் காரணமாக விளைகின்றன. அக்குற்றமே

ஆணவ மலம் என்று சைவ சித்தாந்த சாத்திரங்களால் கூறப்படுகின்றது.

(இ) மூல ஆணவ மலச்சேட்டை:- அவ்வாணவ மலமாகிய குற்றம் செம்பீற் களிம்புபோல அனுதி செயற்கை உடையது எனவும், உயிர் என்றைக்கு உண்டோ, அன்றைக்கே அது அதனுடன் இசைந்திருப்பதாதலால், சகசமலம் எனவும் கூறப்படும். அது உண்மைப்பொருளே. ஜடப்பொருளும் ஆகும். அறியாமையை விளைவிப்பதற்குக் காரணமானதும் ஆகும். பார்க்கும் தன்மையை உடைய கண்ணின் பார்வையை மறைக்கும் குருட்டுத்தன்மையை உண்டாக்கும் தனிப்பொருளாகிய படலம் என்ற ஒரு உண்மைப் பொருள் போன்றது அது. இவ்வாணவ மலம் ஆன்மாவினுடைய அறிவை மறைத்து ஒரு பொருளையும் காணவொட்டாது, தன்னையும் காட்டாது. ஒப்பற்ற பரம்பொருளையும் காட்டாது மறைத்து நிற்கும்; இருளினும் வலிய குற்றமாகும். இந்த ஆணவ மலம் எண்ணிறந்த சக்திகளையுடையது. இது எல்லா உயிர்களையும் ஒரே தன்மையில் மறைக்காது, பலதிறப்பட்டு நின்று ஆன்ம அறிவை மறைக்கும் தன்மையுடையது. இவ்வாணவ மலத்தின் சக்தி உயிர்களினுடைய அறிவை ஒன்றோடொன்று ஒவ்வாத தன்மையில் மறைத்து வருகின்றது. அந்த மறைப்பிற்கு ஏற்பவே உயிர்களுக்கு உரிய இச்சாஞானக் கிரியைகளால் விருப்பு வெறுப்புகள் உண்டாகின்றன. அவ்விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்ப நல்வினை, தீவினைகளைப்புரிகின்றன. அந்த இருவினைகளாகிய கன்மங்களுக்கு ஏற்பவே உயிர்களுக்கு உடம்பும், மனம் முதலிய அந்தக் கரணங்களும், அவைகளுக்கு ஏற்ற இடங்களாகிய பல்வேறு உலகங்களும், அவை புரிந்த இருவினைக்கு ஏற்ற இன்ப துன்பங்களாகிய போகங்களும், முன்னே சொன்ன அந்த மாயையில் இருந்தே ஒரு கருத்தாவால் தோற்றுவிக்கப் பெற்று உயிர்களுக்கு ஊட்டுவிக்கப்பெறுகின்றன. அந்த மாயையில் இருந்துவரும் எல்லா மாயா காரியப்பொருள்களும் தோன்றி நின்று அழியுந்தன்மை உடையனவாகும். இவை ஆணவமல சம்பந்தமாகிய அனுதி

பிரதிபந்த நோயை உடைய உயிர்களுக்கு எல்லாம் அந்த நோயை மாற்றுவதற்குக் கொடுக்கப்படுகின்ற மருந்து போன்றனவாகும்.

(3) இறைவனின் கருணையே உயிர்கள் அநாதி மல அறியாமை நீங்கி வீடு பெற்றுய்ய சிருஷ்டி முதலிய ஐந்தொழில் புரிவதாகும்.

நோயாளனுக்கு உரிய மருந்தை மருத்துவனே அறிந்து கொடுப்பதுபோல, மலநோய் தீர்த்தற்கு உரிய மாயாகாரியமாகிய மருந்தை அந்த மலநோய் இல்லாத இறைவனே அவனுடைய பேரறிவினாலே அறிந்து கொடுத்தற்கு உரியவன். மலம் ஜடம் ஆதலால் தானே நீங்காது. ஆன்மா அறிவுடையதாயினும், மலத்தால் கட்டுண்டு அறிவும் செயலும் அற்றுக்கிடப்பதால், அது அந்த மருந்தைத் தேடி அடையமுடியாது. அந்த மருந்தும் நோயாளனாகிய ஆன்மாவைச் சென்று பொருந்தாது. ஆகையால் பெருங் கருணையையுடைய இறைவனே ஆன்மாக்களுக்கு உள்ள வினை நோய்களுக்கு ஏற்ப தனுகரண புவனபோகங்களைக் கொடுத்து, சிருஷ்டித்தலையும், பாதுகாத்தலையும், காரியத்தை காரணத்தில் ஒடுக்குதலையும் பக்குவம் வரும்வரை மறைத்துச்செய்து, பக்குவத்தில் வெளிப்பட்டு அருளலும் ஆகிய ஐந்தொழில்களைப் புரிவதும் எல்லாம் அருளின் காரணமாகவேயாம். அச்சோபானபடி முறையாலே மலநீக்கம் செய்தால் ஒழிய ஆன்ம லாபமாகிய பாச நீக்கமும் வீடு பேறும் இல்லையாகும். இப்படிச் செய்யும் இறைவன் கருணையே திருவருள் எனப்படும்.

(4) இறைவனுக்குத் திருவருளே திருவுருவம்.

அத்திருவருளே அவருக்குத் திருமேனி எனவும் கூறப்படும். அத்திருமேனியை இறைவன் வேண்டும் போது தானே எடுத்துக்கொள்வன். இந்தத் திருவருள் விளங்கி நிற்கும் நிலையே அவனுக்குத் திருவருள் சொரூபச் சிறப்புநிலை உருவமாகும். மற்றொன்று பொதுநிலையாகிய தடத்த நிலை உருவம் எனப்படும்.

அத்தடத்தமாவது அருவம், அருஉருவம், உருவம் என மூத்திறப்படும். உயிர்களின் பக்குவ நிலைக்கு ஏற்ப இறைவன் தனது திருவருள் சத்தியால் மாயையை அதிட்டித்துக்கொண்டு நிற்குங்கால், அருவம் முதலிய பெயர்களைப் பெறுகின்றான். இந்த மாயா அதிட்டான வடிவங்கள் அவனுடைய உபசாரத் திருமேனிகள் என்று சொல்லப்படும். உபசாரத் திருமேனிகள் என்பன இந்த மாயா சரீரத்தைக் கொண்டுள்ள பக்குவான் மாக்களிடத்தில் அதிட்டித்து நின்று (தங்கி நின்று) அருள்புரிபவன் ஆதலின், திருவருள் வாயிலாக அவற்றால், தான்பந்தம் உறாமைபற்றியும், வந்த பெயர்களாகும். இவை ஏகான்மவாதிகள் கூறும் கற்பனை உருவங்கள் அல்ல.

## (5) கடவுளின் திருவருள் உருவங்களுக்கும், ஆன்மாக்களின் மாயாகாரிய உருவங்களுக்கும் உள்ள வேறுபாடு.

மேற்சொன்ன மாயா காரியங்களே உயிர்களின் உடம்பு, பொறி புலன்களாக அமைகின்றன. இந்த மாயா காரியங்களைக்கொண்டே உயிர்கள் அறிவு, இச்சை, செயல்கள் விளங்கப்பெறுகின்றன. ஆனால் இறைவன் இந்த மாயா காரியங்களைக்கொண்டு அறிவு, இச்சை, செயல்கள் விளங்கப்பெறுவார் அல்லர். அவர் எந்தச் செயலை ஆற்றுதற்கும் அவருடைய திருவருளே துணை செய்கிறது. அந்தத் திருவருளே அவருடைய திருமுடி, திருமுகம், திருக்கைமுதலிய உருவங்கள் ஆகும். அவருடைய திருக்கையிலே தாங்கப்பெற்ற மழுசூலம் முதலிய ஆயுதங்களும் அந்தத் திருவருள் மயமே ஆகும். இங்ஙனம் இறைவனுக்குத் திருமேனி முதலியனவாக நிற்கும் அந்த அருள் ஒரு ஜடப்பொருள் அன்று. ஒரு பேரறிவாகிய சித்துப்பொருளினுடைய குணமே ஆகும். அந்தக் குணமே சக்தி எனப்படுகின்றது. அந்தக் குணத்தை உடைய குணியேசிவம் ஆவார். குணம் - பண்பு. குணி - பண்பி. பண்பும் பண்பியும் வேறாகப் பிரிக்க முடியாதவாறுபோல, சிவமும் சக்தியும் தம்முள் வேறு

படுவர் அல்லர். நெருப்பும் சூடும்போல அவ்விருவரும் தம்முள் பிரியாத தன்மை உடையவர்களே. அவர்கள் சூரியனும் கிரணமும்போல தம்முள் ஒன்றுபட்டிருப்பர். சூரியப் பிரபையில் கிரணங்கள் வியாப்பியமாய் இருத்தல்போல, சிவத்தினிடத்தில் சத்தி வியாப்பியமாய் இருக்கின்றது. இங்கே சிவம் பூரண வியாபகமாகவும் சத்தி பூரண வியாப்பியமாகவும் பொருந்துவர். இங்ஙனம் அருள் மயமாக விளங்கும் இறைவனுடைய திருமேனியும், மலத்தால் மறைப்புண்டு அறிவற்றுக் கிடந்த உயிர்களுக்கு மலநீக்கத்தின்பொருட்டு கன்ம அளவிற்கேற்ப அருட்கடலாகிய இறைவனால் கொடுக்கப் படும் ஏகதேச அறிவைச்செய்யும் மாயையின் வாயிலாக நம்போல்வாரது உடம்பு முதலியனவும், தம்முள் ஒரு போதும் ஒப்பன அல்ல. இந்த மாயா உடம்பு மனம் முதலியவற்றைத் துணையாகக்கொண்டு, அந்த இறைவனுடைய அருள் திருமேனிகள் ஒருபோதும் ஆன்மாக்களால் அறியப்படுவேனவும், வரையறை செய்து உணர்த்தப்படுவனவும் அல்ல.

திருமுடி முதலிய அவயவங்களைத் தாங்கிய இறைவனின் அருட் திருமேனியும், ஆன்மாக்களது மாயா உடம்புகளும் தம்முள் ஒப்பனபோலத் தோன்றினும், இவையாண்டும் அருள் தன்மையும் மருள் தன்மையும் ஆகிய வேறு அடிப்படைகளைக்கொண்டு எழுந்தன ஆதலின், அவை தம்முள் தன்மையால் வேற்றுமை உடையனவே. மரத்தால் ஆகிய ஒரு பாவையும், இரும்பினால் இயன்ற ஒரு பாவையும், நெருப்பினால் காய்ச்சப் பட்ட ஒரு இரும்புப் பாவையும் தம்முள் உருவத்தால் ஒப்புமை உடையன ஆயினும், லகுத் தன்மையாலும், கடினத்தாலும், நிறத்தாலும் சுடும் தன்மையாலும் தம்முள் தனித்தனியே வேறுபட்டு இருத்தல்போல இறைவனது திருவருள் திருமேனியும் உயிர்களின் மாயா உடம்புகளும் தம்முள் தனித்தனி வேறுபட்டிருப்பனவே ஆகும். அறிஞரும் அறிவில்லாதாரும் உருவத்தால் ஒப்புமை உடையார் ஆயினும் தன்மையால் பெரிதும் வேறுபாடு உடையர் என்பது அறிஞர் பலருக்கும் ஒத்த துணிபாதல் கண்டு கொள்க.

## மேற்கோள் பாடல்கள்.

மும்மல காரிய உடலும் உயிர்களின் வீடு பேறும்
செப்பறைப்பதி அகிலாண்டேசுவரி பதிகம்.

(மாதவச்சிவஞான முனிவர் அருளியது)

(1) செம்புறு களிம்பென அநாதிமலம் மூழ்கியிருள்
சேரும்அலர் விழியென் னவே
தெளிவற்ற கேவலத்து அவை பெற்று இருந்துமல
சேட்டையால் குருவி ருடர்
தம்பிணியி னுலுற்ற பால் நோக்க வவை
தமையளிப் பாரென் னநான்
சார்சன்ம மாயையை விரும்ப நீ தந்திடச்
சகலனுய்ச் சுழல் கறங்கு
பம்பரம தென்னநீள் பிறவிச்சுழிக் குளே
பட்டுழல் பெரும் பாவியேன்
பாழான மலமற்று வினையற்று மாயையின்
பற்றுவிட் டெனைய றிந்துன்
அம்பொன்அடி நீழல்சேர்ந்து ஆனந்தம் உண்டு நான்
அதுவாய் இருப்பது என்றோ
அருள்ஞான வாரியே † ராசை மேவிய செல்வ
அகிலாண்டம் என்னும் அரசே.

† ராசை — ராசவல்லிபுரம் — செப்பறைப்பதி — திருநெல்வேலி ஜில்லா)

### திருவாதவூரர் புராணம்

(கடவுள் மாமுனிவர் அருளியது)

(2) களிம்பு தோய்ந்த செம்பு எனஉனை மருவும்
† கருமை கூர்மலம் கண்டது கலக்கும்
பளிங்கு போன்றது உன்தன்மை அம்மலத்தின்
பற்றினுல் உடல்பல எடுத்து உழன்றாய்
வளங்கு லாம்புவனம் தொறும் முறையே
வல்வினைப் பயன் வரும் நெறி அறிந்து
அளந்து நாம்தர P நுகர்ந்துமே F நுகரவும்
ஆக்கியே திரிந்தனை மன அழுக்கால்.

† ஆணவமலம் P பிராரப்தவத்தை அனுபவித்து † ஆகாமிய வினை.

## தாயுமானவர் பாடல்.

(3) காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப்போற்
கட்டுண் டிருந்தவெமை வெளியில்விட் டல்லலாங்
காப்பிட் டதற்கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசும்பாழ் பொய்யுடல்
பெலக்கவிளை யமுதமூட்டிப்
பெரியபுவனத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவிளை யாட்டமைத்திட்
டேரிட்ட தன்சுருதி மொழிதப்பில் நமனைவிட்
டிடருற உறுக்கியிடர்தீர்த்
திரவுபக லில்லாத பேரின்ப வீட்டினில்
இசைந்துதுயில் கொண்மினென்று
சீரிட்ட வுலகன்னை வடிவான எந்தையே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(4) உன்னிலையும் என்னிலையும் ஒருநிலை யெனக்கிடந்
துளறிடும் அவத்தையாகி
உருவுதான் காட்டாத ஆணவமும் ஒளிகண்
டொளிக்கின்ற இருளென்னவே
தன்னிலைமை காட்டா தொருங்கவிரு வினையினால்
தாவுசுக துக்கவேலை
தட்டழிய முற்றுமில் லாமையை யதனால்
தடித்தகில பேதமான
முன்னிலை யொழிந்திட அகண்டிதாகாரமாய்
மூதறிவு மேலுதிப்ப
முன்பினொடு கீழ்மேல் நடுப்பக்கம் என்னுமல்
முற்றுமா னந்தநிறைவே
என்னிலைமை யாய்நிற்க இயல்புகூ றருள்வடிவம்
எந்நாளும் வாழி வாழி
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

(5) குறிக ளோடுகுண மேது மின்றியனல்
ஒழுக நின்றிடும் இரும்பனற்
கூட லின்றியது வாயி ருந்தபடி
கொடிய ஆணவ அறைக்குளே

அறிவ தேதுமற அறிவி லாமைமய
மாயி ருக்குமெனை யருளினல்
அளவி லாததனு கரண மாதியை
அளித்த போதனை யறிந்துநான்
பிறிவி லாதவண நின்றி டாதபடி
பலநி றங்கவரும் உபலமாய்ப்
பெரிய மாயையி லழுந்தி நின்னது
ப்ரசாத நல்லருள் மறந்திடுஞ்
சிறிய னேனுமுனை வந்த ணைந்து சுக
மாயி ருப்பதினி என்று காண்
தெரிவதற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

துறைசை, உலகுடை நாயனுர் அருளிய
கழில் நெடில் ஆசிரிய விருத்தம்.

(6) என்னையும் உனையும் தன்னையுங் காட்டாது இந்திய விடயமே [காட்டி
இயல்வினை மாயை இரண்டையும் எனையும் இணக்கிய ஆணவ [மலத்தின்
தன்னுறு வழிநின் சத்தியை நடாத்தித் தரும்அதன் சத்திகள் [எலாம்
தயங்குநின் உருவம் மூன்றினல் மாற்றித் தாழ்நிழல் தந்து [காத்தனையே

(7) தண்வீலா மலத்தின் குருடனேற்சி உடலம்தான் ஒரு [கோலெனக் கொடுத்துச்
சத்தமேயாதி விடய மோர்ஐந்தின் தன்வழி புசித்திடத்தந்து
குணவழி நடவார் குணவழி நடந்து குணத்தினைத் [திரும்புவார் போலக்
கொடுவினை, ஒப்பச் சத்திநிபாதம் கூர்மல பாகமுங் குறித்தே
இணையிலா இன்ப வடிவமாம் உன்னேடு என்னையும் இரண்டற [வைத்தாயே

சிவஞான சித்தியார் இறைவன் சிறப்பிலக்கணம்.

(8) சிவன்அரு உருவும்அல்லன் சித்தினேடு அசித்தும் அல்லன்
பவமுதல் தொழில்கள் எல்லாம் பண்ணிடுவானும் அல்லன்
தவமுதல் யோகபோகம் தரிப்பவன் அல்லன் தானே
இவைபெற இயைந்தும் ஒன்றும் இயைந்திடா இயல்பினனே

இறைவன் பொது இலக்கணம்.

(9) அருவமோ உருவ அருப்பமானதோ அன்றி நின்ற
உருவமோ உரைக்கும் கர்த்தா வடிவு எனக்கு உணர்ந்த
[இங்கு என்னின்
அருவமும் உருவ அருபமானதும் அன்றிநின்ற
உருவமும் மூன்றுஞ் சொன்ன ஒருவனுக்கு உள்ளவாறே.

திருச்சிற்றம்பலம்.

# உருவ வழிபாட்டு உண்மை.

(திருநெல்வேலி சிந்துபூந்துறை ஓய்வுபெற்ற தாசில்தார், சைவத் திருவாளர் மா. வே. நெல்லையப்ப பிள்ளை பி.எ., அவர்களின் குறிப்புரை)

## முன்னுரை.

நமது இந்திய நாட்டில் பல்லாயிர ஆண்டுகளாக இந்து மக்கள் உருவ வழிபாடு செய்து வருகிறார்கள். கிறிஸ்தவ மதத்தாரும், இஸ்லாமிய மதத்தாரும் ஆகியவர்களால் உருவ வழிபாடு நாகரீகமில்லாதவர்களுடைய செயலென்று பழிக்கப்பட்டுவருகிறது. இந்து மக்களிற் சிறு பகுதியினராகிய ஒரு சாரார் சென்ற சில ஆண்டுகளாக ருஷ்ய நாட்டைப் பின்பற்றிக் கடவுட் கொள்கையில்லாதவர்களாய் உருவ வழிபாட்டைப் பழித்துப் பேசிவருகின்றனர். சைவ சமய உண்மையையும் பிற இந்து சமயப் பிரிவுகளையும் அறியாத நம் மக்கள் அப்பழிப்பு உரைகளைக் கேட்டு உருவ வழிபாட்டின் உண்மையைப்பற்றி மயங்கித் தியங்குகின்றனர். உருவ வழிபாட்டுண்மையைப்பற்றிக் கொண்ட மயக்கம் நீங்கி உண்மையை ஒருவாறாவது உள்ளபடி அறியும் பொருட்டுச் சுருக்கமாக சில உரைகள் இங்கே கூறுவது இன்றியமையாதது.

உருவ வழிபாட்டுண்மையென்பது உருவ வழிபாட்டைப்பற்றிய உண்மை. (Truth about image worship) உருவ வழிபாடு என்ற தொகைச் சொற்றொடர் உருவத்தின்கண் வழிபாடு என விரியும். அவாய் நிலையாய் நிற்கிற சொற்களையும் வருவித்துக்கூறின், மக்கள் கடவுளை உருவத்தின்கண் செய்யும் வழிபாடு என விரியும். இவ்வழிபாடு எதற்காக மக்கள் செய்யவேண்டுமெனின், மக்கள் அறியாமை நீங்கி அறிவுடையவர்களாய்க் கடவுளை அடைந்து இன்பம் அடைதற்பொருட்டு என்பதாகும். கடவுளை வழிபட வேண்டிய அவசியத்தைப்பற்றியும் வழிபாட்டினுல் அடையத்தகும் பயனைப்பற்றியும் கடவுட் கொள்கையுடைய சமயத்தாரெல்லாரும் ஒற்றுமைப்பட்ட கருத்துடையவர்கள். உருவ வழிபாடு வேண்டும் அல்லது வேண்டாம் என்பதைப்பற்றியே அவர்கள் வேற்றுமைப்பட்ட கருத்துடையவர்கள். அந்த வேற்றுமைப்பட்ட கருத்தைப் பற்றியே இங்கே ஆராய்ந்து உண்மை கூறப்படும்.

உருவ வழிபாட்டைப்பற்றிய ஆராய்ச்சி, முதலாவது உருவ வழிபாடில்லாமல் மக்கள் கடவுளை வழிபட முடியுமா என்பதைப்பற்றியும், இரண்டாவது முடியாதென்று மெய்ப்பிக்கப்படுமானுல் அந்த வழிபாடு எவ்வாறு செய்யவேண்டும் என்பது பற்றியும், செய்யப்படும்.

(1) உருவ வழிபாடு இல்லாமல் கடவுளை வழிபட முடியுமா ?

மக்களாகிய நாம் வாழும் இவ்வுலகம் மண், நீர், தீ, காற்று, வான் (ஆகாயம்) என்னும் ஐம்பெரும் பூதங்களால் அமைந்தது. உருவங்களினது வேற்றுமையை வகுத்து உருவம், உருவ அருவம், அருவம் என மூவகையாக அறிஞர் கூறுகின்றனர். மண்ணும் நீரும் உருவம், தீ அருவுருவம், காற்றும் வானும் அருவம். உலகத்தைப் போலவே சிறு உலகமாகிய நமது உடலும் ஐம்பெரும் பூதங்களால் அமைந்து மூவகை உருவங்களாய் உள்ளன. உருவங்களாகிய உடலில் வாழும் மக்களாகிய நாம் ஒருவரோடு ஒருவர் தொடர்பு உடையவர்களாய் வாழுங்

கால், ஒருவரை ஒருவர் உருவங்களில் பார்க்கிறோமே யன்றி, உருவங்களில் விளங்கும் உயிர்களை நாம் பார்க்கின்றோமில்லை. நாம் ஒருவரோடொருவர் பேசும் பேச்சுக்கள் ஒலிக் கூட்டங்களால் அமைந்துள்ளன. அவ்வொலிக் கூட்டங்களும் அவைகளை வரி வடிவில் எழுதும் எழுத்துக்களும் எழுத்துக் கூளாலாய மொழி களும் உருவங்களேயாகும். நாம் பேசும் பேச்சுக்க ளுக்கு ஆதாரமாக, நமது மனதில் எண்ணும் இச்சை களும் எண்ணங்களும் பேச்சின்வழி நிகழும் செயல்க ளும் சூக்கும தூல உருவங்களாக அமைந்துள்ளன. இச்சைகளும் எண்ணங்களும் உருவங்கள் ஆதலினலே தான் மேலைநாட்டில் உருவப்படங்களாக அவைகள் பிடிக்கப்படுகின்றன. நாம் இவ்வுலகில் நமது மனம் வாக்குக் காயங்களினலே இச்சை எண்ணம் செயல்களை நிகழ்த்தி ஒழுகுகின்றோம். அவ்வொழுக்கம் நேர்மையா யிருக்குமானல் இன்பமும், நேர்மையில்லாதிருக்குமானல் துன்பமும் நாம் நுகர்கின்றோம். ஆகவே நாம் உலகில் நிகழ்த்தும் இச்சை எண்ணம் செயல்களும் அவற்றை நிகழ்த்துதற்குக் கருவிகளாகிய மனம் வாக்குக் காயங்க ளும் தூல சூக்கும உருவங்களாக அமைந்துள்ளன. உலக காரியங்களைப்போல நமது மனம் வாக்குக் காயங் களால் இச்சை எண்ணம் செயல்களை நிகழ்த்தி, கடவுளை வழிபடுதல் வேண்டும். அப்படியானல் உலகில் வாழும் மக்களாகிய நாம் தூல சூக்கும உருவங்களிலன்றிக் கடவுளை வழிபடுதல் முடியாதென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளங்கும். தூல சூக்கும உருவங் களிலன்றி நாம் உலகில் கடவுளை வழிபட்டு அவரை அடைந்து இன்புறலாம் என்று கூறும் உரைகளெல் லாம் போலிஉரைகளேயன்றி அணுவளவினும் உண்மை உரைகள் அன்று.

(2) கடவுள் வழிபாடு எவ்வாறு செய்யவேண்டும்?

கடவுள் அவருடைய உண்மை நிலையில் உருவம், உரு அருவம், அருவம் என்னும் மூவகை உருவங்களையும் கடந்து, அங்கிங்கெனதபடி எங்கும் நிறைந்து பேரொளி யாய் இருக்கின்றனர். அவருடைய பேரொளிக்குப்

பல்கோடி பகலவர் ஒளிக்கூட்டமும் சமமாகாது. அவருடைய உண்மை நிலையாகிய இது சொரூப நிலையென்றும் சிறப்பு இயல்பு நிலையென்றும் தன்னியல்பு நிலையென்றும் கூறப்படும். இந்த உண்மை நிலையில் கடவுள் எப்பொழுதுமிருந்தால் மலப்பிணிப்பினலே அறியாமை நிறைந்துள்ள நாம் அவனைப்பற்றி எண்ணவாவது இச்சித்து அன்பு செய்யவாவது வழிபாடு செய்யவாவது முடியாது. அதற்காகக் கடவுள் நம்மேல் வைத்த பெருங் கருணையினலே நாம் அவனை எண்ணும் பொருட்டும் இச்சித்து அன்பு செய்யும் பொருட்டும் வழிபாடு செய்யும்பொருட்டும் உலகிலும் உடலிலும் உள்ள உருவங்களில் அவற்றில் தோயாது சேர்ந்திருக்கின்றான். இப்படி அவன் சேர்ந்திருத்தலைப்பற்றி அவனை அட்டமூர்த்தியென்று சைவ சமய நூல்கள் கூறுகின்றன. மக்கள் தங்கள் பக்குவத்திற்குத் தக்கபடி தன்னை வழிபடுதற்பொருட்டே கடவுள் உருவத்திலும், உருவ அருவத்திலும், அருவத்திலும் அமர்ந்திருக்கிறான். இந்த நிலை அவருக்குத் தடத்தநிலை அல்லது பொது இயல்பு நிலை அவருக்குத் தடத்தநிலை அல்லது பொது இயல்பு நிலை என்று கூறப்படும்.

வழிபாட்டு முறைகள் மக்களுடைய பக்குவத்திற்குத் தகுந்தபடி உண்மைச் சரியை உண்மைக் கிரியை உண்மை யோகம் உண்மை ஞானம் என நான்காகச் சைவ சமயத்திற் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

"விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கும் அரும்பு மலர் காய்கனிபோ லன்றோ பராபரமே" என்று தாயுமான அடிகள் இப்படி முறைவழிபாட்டு நெறியைக் கூறியருளினர். இவ்வழிபாட்டு முறை ஒவ்வொன்றையும்பற்றி இங்கு விரித்துக் கூற இடமில்லை. இவ்வழிபாட்டு முறைகளையும் அவற்றின் பயனையும் பற்றி விரிவாய் அறிய விரும்புகிறவர்கள் சிவஞான பாடியம் கழகப் பதிப்பு 426வது பக்கமுதல் 434வது பக்கங்கள் வரை ஓதி அறிக.

மேலே கூறிய வழிபாட்டு முறைமைப்படி சரியையாளர்க்கு உருவ வழிபாடும், கிரியையாளர்க்கு உரு

அருவ வழிபாடும், யோகிகளுக்கு அருவ வழிபாடும், ஞானிகளுக்கு எங்கும் நிறைந்துள்ள தூவெளி ஒளியில் வழிபாடும் தக்க வழிபாட்டு முறைகளாக நூற்களில் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வழிபாட்டு முறைகளின்படி வழிபடுகிற மக்களுக்கு, எவ்வழிபாட்டு முறையில் வைத்து அவர்கள் வழிபடுகிறார்களோ, அவ்வழிபாட்டு முறையில் கடவுளும் அமைந்து நின்று, அவர்கள் அறிவுக்குத் தக்கவாறு இன்ப நலத்தை அருள் செய்வர்.

அறிவே சிவனுருவம்; அன்பே சிவனுருவம். இந்த அறிவும் அன்பும் சேர்ந்தே செயலுண்டாகின்றன. திருந்திய இச்சையே அன்பாகும். அறிவு அன்பு செயல்கள் உலகில் அறத்தின் வழி ஒழுகுதலினால் ஏகதேசமாய் மல இருள் நீங்கின அளவு அருளொளி விளங்கி மக்களுக்கு உலக இன்பம் உண்டாகின்றன. அறச் செந்நெறி ஒழுக்கத்தினாலே ஒருவனிடத்தில் ஏகதேசமாய் விளங்குகிற அருளொளியானது அவ்வொழுக்கம் தொடர்ந்து முதிர்ந்துவருதல் காரணமாகப் பெருகிப் பெருகி, முடிவில் முற்றிலும் மல இருள் நீங்கிப் பேரொளியாய் விளங்குகிறது. அப்பேரொளிக் காரணமாக, அவன் பேரறிவும் பேரன்பும் அடைந்து பேரின்பம் உடையவனாய் இறைவனுடைய திருவடிகளை அடைதலாகிய செயலினாலே பேரின்பம் உறுகிறான். உலக அறநெறியில் மூன்று வகைகளாய்ப் பிரிந்துள்ள அறிவு, அன்பு, செயல்கள் மூன்றும் வீட்டு நெறியாகிய அறச் செந்நெறி முடிவில் ஒன்றுபட்டுப் பேரின்பமாய் முடிகின்றன. இவ்வாறு அறிவும் அன்பும் செயலும் ஒளி விளக்கமடைந்து ஒன்றாகும்பொழுது அறிவு என்ற பெயரால் கூறப்படுகிறது. அந்தப் பேரறிவே வீட்டின்பம் அடைதற்குச் சாதனமாயுள்ளது. இந்த அறிவும் அன்பும் செயலும் பல பிறப்புக்களாலாகிய உலக வாழ்வில் மக்களுக்குப் படி முறையின் வரன்முறையாகப் பெருகி வளர்ந்து முருகி வீட்டு நெறியில் பேரறிவாக ஒன்றுபடுதற்கே மேலே கூறிய வழிபாட்டு முறைகள் சைவ சமயத்திற் கூறப்பட்டிருக்கின்றன. மக்களுக்குப் பல பிறப்புண்மையையும் வினைச் சட்டத்தையும் (Law of Karma)படி முறையில் உண்டாகும்

உயிர் வளர்ச்சியையும் (Soul Evolution) அறியாத புறச் சமயத்தார்கள் பல பிறப்புக்களில் அனுபவப் பயனை அடையத்தக்க சரியை, கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கு வழிபாட்டு முறைகளையும் அறியும் திறனில்லாதவர்களாய் உருவ வழிபாட்டைப் பழித்து இகழ்கின்றார்கள். அதுபற்றி உருவ வழிபாட்டை அனுட்டித்துவரும் நம்மவர்கள் சிறிதும் மயங்காமல் அதன் உண்மையை நூல்களைக் கற்றும் கேட்டும் ஆராய்ந்தும் அறிந்து, உலகில் உலக இன்பத்தையும் சுவர்க்க இன்ப நலத்தையும் பேரின்ப நலத்தையும் எல்லாம்வல்ல இறைவனுடைய திருவருளினாலே அடைந்து, உயர்வார்களாக.

(சிவஞானசித்தியார் சுபக்கம் 8-ம் சூத்திரம்.)

சைவ நெறி.

(1) புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும்
புகல்மிருதி வழிஉழன்றும் புகலும்ஆச் சிரம
அறத்துறைகள் அவையடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும்
அருங்கலைகள் பலதெரிந்தும் ஆரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத் தெளிந்தும் சென்றால் சைவத்
திறத்தடைவர் இதிற்சரியை கிரியாயோகம்
செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்.

குரு வழிபாடு.

(2) ஞானயோ கக்கிரியா சரியைநாலும்
நாதன்றன் பணிஞானி நாலினுக்கும் உரியன்
ஊனமிலா யோகமுதல் மூன்றினுக்கும் உரியன்
யோகி கிரியாவான்தான் ஒண்கிரியை யாதி
ஆனஇரண் டினுக்குரியன் சரியையினில் நின்றோன்
அச்சரியைக் கேஉரியன் ஆதலினால் யார்க்கும்
ஈனமிலா(ன்) ஞானகுரு வேகுருவும் இவனே
ஈசன்இவன் தானென்றும் இறைஞ்சி ஏத்தே

திருச்சிற்றம்பலம்.

---

# முடிவுரை.

---

சிந்தையிலும் என்றன் சிரத்தினிலும் சேரும்வகை
வந்தவனை மண்ணிடைநாம் வாராமல்—தந்தவனை
மாதினுடன் எத்திறமும் வாழ்ந்திருக்க என்பதலால்
ஏதுசொல்லி வாழ்த்துகேன் இன்று.

ஈண்டு கூறியவற்றால் இறைவன் தன் திருவுருவமாகக் கல், செம்பு, பொன் முதலாக யாதேனும் ஓர் ஆதாரத்தின்கண், முதலவனதன் திருவருட் செயல்களுக்குக் காரணமாகிய அவன் தன் அருட் குணங்களையே, இன்னது இன்னது, இன்னது இன்ன அவயவம் எனக் கருதி நூல்களுள் விதித்துக் கூறியவாற்றால் வழிபட்டுவரின், பொன்னும் மெய்ப்பொருளும் பெற்று, போகமும் திருவும் புணர்ந்து வாழும் தூய இன்ப வாழ்க்கையை ஒருவன் இம்மையே பெறுதல் ஒருதலை. "மாயை காரிய உருக்கணும் எம்பிரான் வடிவம்—ஆயவேல் அவை அருள் மயமாகும்" என்ப ஆகலின், இவ்வுண்மையை உணரமாட்டாதார் திருவுருவ வழிபாட்டைக் குறைத்துக் கூறும், பொருளில் (அர்த்தமில்லாத பயனற்ற விதண்டாவாத) கூற்றுக்கள் ஈண்டு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்படா.

இனி முதல்வனை வழிபட்டு அருள்பெருமாற்றை, விநாயகர் அகவல், திருமுருகாற்றுப்படை, சைவத் திருமுறைகள், திருவங்கமாது, இலிங்க புராணம் முதலியவற்றால் உயர்த்துணர்ந்து கொள்க. இவ்வழிபாட்டின் அடிப்படை, உயிர்கள் மாடகு அன்பு பூண்டு, அறிவு நூல்கள் விலக்கியவை விட்டு விதித்தன செய்தலே என்பது கடைப்பிடி நன்மையாகக் கொள்க.

எவ்வுயிரும் நீங்கா துறையுமிறை சிவனென்று
எவ்வுயிருக்கும் அன்பாயிரு.

திருச்சிற்றம்பலம்.

---

# பிரும்ம ஞான தமிழ் பிரசுர சங்கம், (அடையார்)

(Registered under Act. XXI of 1860.)

காரியாலயம்:—25. ஜவுளிக்காரத்தெரு, திருவாரூர்.

மதம், விஞ்ஞானம், தத்வ சாஸ்திரம் முதலிய கருத்துக்களை "தர்ம ஜோதி" மாத வெளியீடு, துண்டுப் பிரசுரங்கள் புஸ்தகங்கள் மூலமாக அச்சிட்டு தமிழ்நாடெங்கும் பரவச்செய்வது இச்சங்கத்தின் முக்கிய நோக்கங்கள்.

வருஷ சந்தா:— ரூ. 2—0—0. அங்கத்தினர்களுக்கு இச்சங்கத்தின் புஸ்தகங்களை தபால் செலவன்னியிலும் தர்மஜோதியை இனமாகவும் அனுப்பப்படும்.

பிரஸிடெண்ட்:— ஸ்ரீமான் N. A. நாகநாதய்யர் B. A.
40, அலர்மேலு மங்காபுரம், மைலாப்பூர், சென்னை.

நிர்வாக கமிட்டி அங்கத்தினர்:—
ஸ்ரீமான் T. S. கிருஷ்ணமூர்த்தி அய்யர், M.A. I.E.S. (Retd.)
ரிக்ரூட் ஸ்கூல் ரோட், கோயம்புத்தூர்.

காரியதரிசி:— ஸ்ரீமான் N. ராமபத்ரன் B.A., திருவாரூர்.

## சங்கத்தின் பிரசுரங்கள்.

| | |
|---|---|
| மஹநீயர்கள் ஸ்தோத்திரங்கள் | 0—2—0 |
| ஸனாதன தர்மம் 2-வது பதிப்பு 475 பக்கங்கள் | 1—0—0 |
| கல்வி கற்பித்தல் 2-வது பதிப்பு 78 பக்கம் | 0—8—0 |
| குரு உபதேசம் (at the feet of the Master) | 0—2—0 |
| கிருஷ்ணமிர்த போதம் ஆனந்தநாடு | 0—6—0 |
| ,, ,, ஞான புஷ்கரணி | 0—6—0 |
| ,, ,, உரிமையின் வாழ்வு | 0—6—0 |
| பல விஷயங்களைப்பற்றி சிறு வியாசங்கள் | 0—5—0 |
| **Kettle Drums** (*Short Stories*) *English.* | 1—0—0 |
| இந்திய ஸ்தல யாத்திரை மான்மியம் | 2—0—0 |
| ஆலயங்களின் உட்பொருள் விளக்கம் | 5—0—0 |
| கடவுளுக்கு உருவ வழிபாடு வேண்டுமா? | 0—6—0 |

# தர்ம ஜோதி.

**ஓர் ஆஸ்திக மாதாந்திர தமிழ் பத்திரிகை.**

*பிரதி தமிழ் மாத முதல் தேதியில் வெளிவரும்.*

வருஷ சந்தா — ரூபாய் இரண்டு.

வெளிநாடு — ரூபாய் இரண்டரை.

சகல மதங்களின் உட்கருத்தை விளக்கிக் காட்டி, மதங்களிலுள்ள தத்வங்களைத் தெளியப்படுத்தும் ஓர் சிறந்த மாத சஞ்சிகை.

திருத்தொண்டர் வரலாறு, சைவ சமயத்தின் கோள்பாடு, ஆழ்வாராதி வாழ்க்கை வரலாறுகள், உலகில் உதித்து வாழ்க்கை நடத்திய மகாத்மாக்களின் ஜீவிய சரித்திரங்கள், பிரும்மஞான சங்கத்தின் வரலாறு, நோக்கங்கள், முதலியவைகளைக் கட்டுரைகள், வியாசங்கள், மூலமாக பிரபல எழுத்தாளர்களால் எழுதப்பட்டு வெளிவரும்.

சந்தா செலுத்துபவர்கள் வருஷ சந்தா ரூபாய் இரண்டையும் மணிஆர்டர் மூலமாக அடியில் கண்ட விலாசத்திற்கு அனுப்பவும்.

நிர்வாக ஆசிரியர் :

**"தர்ம ஜோதி".**

25. ஜவுளிக்காரத்தெரு, திருவாரூர்.

உ

குருபாதம்.

# அறிவிப்பு.

---

ஆஸ்திகம் வளரும்பொருட்டு அன்புடன் இக் கட்டுரைகளை உபகரித்த சிவநேசச் செல்வ பெரியோர் களுக்கும் உடனிருந்து அச்சிட உதவிபுரிந்த அன்பர்கள் திருவாரூர் போர்டு உயர்தரப்பள்ளி தமிழாசிரியர்க ளாகிய திருவாளர்கள் மு. இரத்தின தேசிகர், மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை, சித்தாந்த சரபம், மௌன குரு உருத்திரமூர்த்தி தேசிகர், பிரசங்கபூஷணம் தியாகராஜ பிள்ளை, பிர்மஞானசபை "தர்ம ஜோதி" பத்திரிகை ஆசிரியர் என். ராமபத்ர தீக்ஷிதர், ஹோமியோ கலர் (பவர்) அச்சகத்தினர், "நிக்கிரகங்கள் தானும் நேசத் தால் ஈசன் செய்வதால் இறை செயல் அருளே என் றும்" என்றபடி, மறைமுகக்காரணமாய், நாத்தழும்பேற, நாஸ்திகம் பேசி, ஆஸ்திக சங்கத்தினரை ஊக்குவித்த நண்பர்கள், முதலானவர்களுக்கும் நன்றி உரியதாகுக.

ஆஸ்திக அன்பர்கள், இக்காலத்துக்கு அவசிய மான இம்மாதிரி சிறு நூல்கள் தொடர்ந்து வெளிவந்து ஆஸ்திகம் பெருகச்செய்ய, நன்கொடை உதவிபுரிய திருவருள் முன்னிற்கப் பிரார்த்தனை.

புத்தகம் வேண்டுவோர் ஆறு அணு தபால் ஸ்டாம்புகள் அனுப்பி புக்போஸ்டில் அடியிற்கண்ட வர்களிடம் பெற்றுக்கொள்ளலாம்.

ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள்,
தருமை ஆதீன சமயப் பிரசார கோஷ்டி தலைவரும்,
திருவாரூர் ஆஸ்திக சங்கத் தலைவரும்,
இராஜன்கட்டளை மடம், தெற்குவீதி, திருவாரூர் P. O.

ஸ்ரீ என் ராமபத்ர தீக்ஷிதர்,
"தர்ம ஜோதி" ஆசிரியர், திருவாரூர்.

இப்படிக்கு,
சோமசுந்தரத்தம்பிரான்.

---

ஹோமியோ கலர் [பவர்] பிரஸ், திருவாரூர்.